SRI N. K. PALANISAMI : இந்த பை-ப்ராக்ட்களை உபயோகிப்பதில், எல்லா பை-ப்ராடக்ட்களையும் உபயோகிக்கும் முறையில் எந்தக் கம்பெனியாவது முன்வந்திருக்கிறதா? அப்படி எந்த பை-ப்ராடக்ட் உபயோகப்படுத்த யாரும் முன்வரவில்லையோ, அதைச் சர்க்காரே எடுத்து நடத்த முன்வருவார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : சில பை-ப்ராடக்ட்கள் அந்த இண்டக்ரேடட் ( Integrated ) ப்ராஜக்டுக்கே உபயோகமாகி விடும். சில பை-ப்ராடக்டுகளை தனித் தொழிலாக ஆரம்பிக்கலாம். சாதாரணமாக இன்னின்ன தொழில்கள் ஆரம்பிக்கலாம் என்றவுடன் அதை ஆரம்பித்து விட முடியாது. அதற்காக ப்ராஜக்ட் ரிபோர்ட் தயாராக வேண்டும். அதைப் பார்த்து மற்றவர்கள் முடிவு செய்வார்கள். ப்ராஜக்ட் ரிபோர்ட் தயாரிக்க ஒரு சப்-கமிட்டி போட்டிருக்கிறோம். அவர்களுடைய ரிபோர்ட்டைக் கொடுக்கச் சொல்லியிருக்கிறோம்.

*Madras Economic Development Council*

* 1351 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை அபிவிருத்தி தேசிய பொருளாதாரக் கவுன்சிலின் சிபாரிசுகள் சர்க்காருக்குக் கிடைத்தனவா?

(இ) அப்படியாயின், அதன் நகல் ஒன்று மேஜை மீது வைக்கப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN :

(அ) இல்லை.

(இ) எழவில்லை.

*Accidents*

9-00 a.m. * 1352 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 23—2—61-ல் எண் 416 கேள்விக்கு அளித்த பதிலை யொட்டி 1958-1959-ல் ஏற்பட்ட விபத்தில் உயிர்ச்சேதம் எத்தனை? பொருள் சேதம் எவ்வளவு?

(இ) இரவில் ஏற்பட்டது, பகலில் ஏற்பட்டது எவ்வளவு?

THE HON. SRI V. RAMAIAH :

| (அ) | 1958 | 1959 |
|---|---|---|
| Loss of life | 22 | 30 |
| Loss of property | The details and extent of damage are not available. | |

(இ) Split-up figures for day-time and night-time are not available.